ஓம்.

# நேமம் கோவில் வரலாறு

(தலபுராணமும் தோத்திரத் தொகுப்பும்)

செந்தமிழ்ச் செல்வத் திருமணி
**நாராயண—நடராசன் செட்டியார்**





நா. அ. அண்ணாமலை செட்டியார்
நினைவு மலர்

...சங்கம் கீழச்சிவப்பட்டி.

ஓம்.

செயங்கொண்டார் துணை.








நா. அ. அண்ணுமலை செட்டியார்

தோற்றம் ஜனவரி 1896. மறைவு அக்டோபர் 1960.

"வாழி அண்ணுமலை வான்புகழ் மரபினர்
வாழிய செந்தமிழ், வாழ்க சிவநெறி!"

30-3

## சாந்தாநந்த சுவாமிகள் திருமுகம்

ஓம்:

ஸ்ரீ ஸத்குரு ஸதாசிவ ப்ரும்மேந்திர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் அதிஷ்டானம் ஸ்ரீமத் ஸாந்நானந்த ஸ்வாமிகள் அருளிய ஸ்ரீமுகம்:

பக்திப்பா்வலரும், ஸ்ரீ புவனேச்வரி அருள் பொருந்தியவருமான இளவரசன், நா. நடராசன் செட்டியாரால் இயற்றப்பெற்ற "நேமம் தல புராணம்" நமது பார்வைக்கு வந்தது. அது அருட்புலமை நலமும், பக்திச் சுவை நலமும் வாய்ந்து, நல்லறம் வளர்க்கும் நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் பெருமைகளையும், நேமம் நகரச் சிறப்பையும் ஸ்ரீ செயங்கொண்ட சோழீஸ்வரரின் திருப்புகழையும், தேனாற்றின் வளத்தையும் எடுத்துக் காட்டும் தீபமாய் விளங்குகிறது. இத்தகைய நூலை நமது ஆசிரம அபிமானிகளான ராங்கியம் நா. அ. அண்ணாமலை செட்டியார் ஞாபகார்த்தமாக வெளியிடுவது பொருத்தமேயாகும்.

நூலாசிரியர் நடராசன் செட்டியாருக்கும்' நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்கும் சர்வ சம்பத்துக்களையும் சதுர்வித புருஷார்த்தங்களையும் சித்திக்கச் செய்யுமாறு ஸ்ரீ புவனேச்வரியம்பாளையும் ஸ்ரீ தத்தாத்ரேய பகவானையும் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கின்றோம்.

அதிஷ்டானம்,

புவனேச்வரி நகர், : : கீழ ஏழாம் வீதி,

புதுக்கோட்டை.

## பேரன்பர் சிறப்புரைகள்

தமிழ் வழங்கும் இடமெல்லாம் யாத்திரை செய்து ஆஸ்திக புத்தியும், தெய்வ பக்தியும் தமிழும் வளரும்படி கவிதைகள் பாடி மக்களுக்குக் களிப்பூட்டி வரும் திருமதுரை. நா. நடராசன் இயற்றியுள்ள "நேமங் கோயில்" தல வரலாற்றின் பாடல்களையும், செயங்கொண்டார் அட்டாட்சரத் தோத்திரத்தையும் படித்து ஆனந்த பரவசம் அடைந்தேன்.

எங்கள் வயிரவன் கோவிலுக்கு நடராசக் கவிராயர் தல புராணம் இயற்றியிருப்பதைப் போல் "நேமங் கோயில் தல புராண" த்தைநடராசப் பெயருடையாரே இயற்றி, எனது மதிப்புக்குரிய ராங்கியம், நா. அ. அண்ணுமலை செட்டியார் நினைவாக வெளியிட்டிருப்பதை மிகவும் பாராட்டுகிறேன்.

இதனைப் படித்துப் பயனடைந்து வையகம் மகிழ, வரம் அருள்பாலிக்க வடிவேலிறைவனை வணங்கிப் பிரார்த்திக்கிறேன்.

இராயவரம் வயி. சித. வயிரவன் செட்டியார்,
உரிமையாளர், வெஸ்ட் டாக்கீஸ், புதுக்கோட்டை.

"செட்டி நாடுற்ற சிவப்பட்டிச் சீர் நகரில்
பட்டம் தமிழ்ப் புலவர் பைந்தமிழோன்—மட்டற்ற
கீர்த்தி நடராசன் எனும் கேள்வி, செல்வம்
கல்வி, தனம்
சீர்த்தி மிகு பெற்றவராம் சீர்!"
"அன்ஞர் அருந்தொண்டை ஆதரிப்பார்
இவ்வுலகில்
பொன்னெழுத்தில் தான் திகழ்வார்; போதா(து)—
நன்ஞட்டில்
நந்தமிழர் மேற்போந்து நற்சமயந்தானறிந்து
பைந்தமிழை ஆதரிப்பார் பார்த்து!"

—பண்டிதர். எஸ். ஆர். துரைசாமி நாயுடு. சேலம்.

30-3

"ஆவுடைய நாதர் திரு அருளாலே நடராசர்
பாவுடைய அரசர் எனப் பார்மெச்ச வாழியவே!
சிவயோக நாயகி தன் திருவருளால் இளவரசர்
தவயோகம் புகழ்பெற்று சந்ததமும் வாழியவே!"
—சிங்காரவேலு.

நினைக்கினும் இன்பம் ஊட்டும் "நேமம் தல புராண" த்தைச் செய்தவர்கள் கீழச்சிவப்பட்டி இள வரசன். நா. நடராசன் அவர்கள்

"நம்பன் அடியார் தமது நலம் பாடும் சம்பந்தன்
கம்பன், வசை பாடாக் காளமேகப் புலவன்
செம்பியனுர் புகழேந்தி, சின்னச்
செயங்கொண்டான்
வம்பியலாத் தனவணிக மாபுலவன் வான்
புகழான்'

என்றெல்லாம் புகழப்பெறும் ஞான சிரோமணியான இவரை தர்ம சீலர்களான ராங்கியம். நா. அ. குடும்பத்தார் பரிந்த பேரன்புடன் பெருமை செய்வது நல் மரபார் இயல்பேயாகும்.

"பாங்குபெறும் தென்நேமப் பதிச்சீரும்
செயங்கொண்டான் பண்பும் கூறி
ஓங்கு நலம் வணிகரெலாம் பெற வாழ்த்தி
நடராசன் உரைத்த நன்னூல்
ராங்கியம் அண்ணாமலையின் ஞாபகத்தை
மக்களிடை நாளும் வைத்துத்
தேங்கு புகழ் நேமத்தின் கும்பாபிடேகத்திற்
சிறந்ததாமே!"
—கை. ஜம்புநாதக் குருக்கள். புதுப்பட்டி.

செட்டிநாட்டுப் புலவர் நடராசனுர் அவர்கள் எழுதியுள்ள "நேமம் தல வரலாறு" புத்தம் புது நறவம் போலச் சுவை நலம் சொட்டும் நூல். தித்திக்கும் தேவாரத்தையும், தேன் சொட்டும் திருவாசகத்தையும் நாளும் இன்னிசையோடு பாடிப் பரவி, எத்திக்கும் தலங்கள் தோறும் சென்று இறைவனை முறையோடு வழிபட்டு, பாமாலைகள் சூட்டி மகிழும் இயல்பினர். கோலத்தில் எளிமையும் சீலத்தில் வலிமையும் கொண்ட பண்பினர். அவர் செய்யும் தொண்டு தமிழுக்கும் சைவத்துக்கும் காலத்தில் செய்யும் தொண்டாகும்! வாழ்க அவர் தம் தொண்டு!

—வித்துவான். ச. தண்டபாணி

"திருமதுரை எனும் கீழச் சிவப்பட்டிக்கே
சிறப்பளித்த நற்புலவர் முத்தப்பாவின்
ஒரு பெரிய வரலாற்றை நூலாய் ஆக்கி
உளம்களித்து நமக்(கு) அளித்த நடராசப் பேர்
பெறும் அன்பர், அவ்வூரில் பிறந்த நண்பர்,
பெருமை உயர் நன்"நேமம் தல புராணம்"
அருமையுடன் இயற்றி நலம் பெற்ருர்; வாழி!
அன்பரெலாம் போற்றி மகிழ்ந்(து) ஏற்றி
வாழ்வாம்!"

—நெற்குப்பை ராமசுப்ரமணிய பாரதி.

"நேமம் புராணம்" நிரம்ப நன்ருகவும் அழகாகவும் அமைந்திருந்ததும் ஆண்டவன் திரு அருளே! மகாவித்வான்கள் பலரோடு தொடர்புள்ள இளவரசன் செட்டியார் நீடு வாழ்வாராக!

—மிதிலை. வி. சோமசுந்தரம்.

## முன்னுரை

செட்டி முருகன் திருவடி நினையும் போதெல்லாம் அவனருள் மறவாத நகரத்தாரையும் நினைந்து போற்றுவது எனது இயல்பு. இந்த இயல்பாலும், சிவவேடப் பொலிவுடையார் எவரே யாயினும் அவரேயாகி அளவளவும் விருப்பாலும் அடியேன் பெற்ற பேறுகள் பலவாகும். அம்முறையில், புதுக்கோட்டை புவனேசுவரி நகர் சதாசிவ பிரமேந்திர சரசுவதி அவதூத அதிஷ்டானத்தில் அருளாட்சி செய்யும் ஸ்ரீமத் சாந்தானந்த சுவாமிகள் ஆணையின் வண்ணம் "பஞ்ச பஞ்சகம்" பாடி அரங்கேற்றும் வேளையில் சுவாமிகள் எளியேனை ராங்கியம். நா. அ. குடும்பத்தினருக்கும் ராயவரம், முருகபக்தர், புதுக்கோட்டை வெஸ்ட் டாக்கீஸ் உரிமையாளர் வயிரவன் செட்டியாருக்கும் அறிமுகப் படுத்தினர்கள்.

ஒன்பது கோவில் வரலாறுகளை முதலில் உரை நடையிலும், மாற்றூர் முதலாக நேமம் இறுதியாக அவ்வக் கோவில் கும்பாபிசேகங்களை ஒட்டி, செய்யுள் வடிவிலும் எழுதிவைத்திருந்தேன். நேமம் தல புராணத்தை பேரன்பர் வெஸ்ட் வயிரவன் செட்டியார் படித்துப் பார்த்து, எடுத்துக்கொண்ட பெரு முயற்சியால் சாந்தானந்த சுவாமிகளின் திருமுகத்துடன் திருப்பணிச் செல்வர் அமரர் ராங்கியம். நா. அ அண்ணமலை செட்டியார் அவர்களின் நினைவு மலராக இன்று வெளிபிடுகின்றேன்.

நேமம் கும்பாபிசேகத்தில் நகர விருந்துச் செலவை ஏற்க விரும்பிய தம் தந்தையாரின் எண்ணத்தைப் பூரணமாக நிறைவேற்றி வைக்கும் அண்ணமலையாரின் திருக்குமாரர்களுக்கும், திருமுகம் தந்து அருளாசி கூறிய சாந்தானந்த சுவாமிகளுக்கும் தல வரலாறு எழுதுவதற்கு வேண்டிய தகவல் தந்து, முன் ஏற்பாடுகளையும் செய்து தந்த நடப்புக் காரியக்காரர் கு. பழ. சு பழ. சுப. சண்முகம் செட்டியார், மானேசர் லெ. வெங்கடாசலம் செட்டியார், ஆகி

யோருக்கும், ஆற்காட்டுக் கோவில்கல் வெட்டுக்களைப் படியெடுத்துப், பல அரிய குறிப்புகளைத் தந்த வீரத் திருமணி சா. கணேசன் அவர்களுக்கும், கோயில் ஐதீகங்களை விளக்கிக் கூறிய சண்முக சுப்பிரமணிய சிவாச்சாரியாருக்கும், பழனி செல்லும் எனது நேர்த்திப் பிராத்தனையை உணர்ந்து மிக விரைவில் அச்சிட்டுத் தந்த சிவகாமி அச்சகத்தினருக்கும் சாற்றுக் கவிகளும் சிறப்புரைகளும் தந்த தமிழ்ப் பெருமக்கள் அனைவருக்கும் எனது உளங்கனிந்த நன்றிகளை உரிமைப்படுத்தி, எளியேனுகிய என்னை ஈர்த்து ஆட்கொண்டு, தன்னை நினையவும் தமிழ் மாலை சூட்டவும் உரிமையளித்துப் பெருமை செய்யும் செட்டி முருகனுக்கும் செயங்கொண்டாருக்கும் அஞ்சலி செலுத்துகின்றேன்.

"ஆண்டவன் நிலையம்"
திருமதுரை
கிழச்சிவப்பட்டி.

நாராயண—நடராசன்
(மாற்றூர்-கண்ணூர்)

**சாற்றுக் கவிகள்**

"எந்தை, குரு, பாடுவார்க்(கு) இளவரசன்
நடராசன்
சந்தார் செம்மேனிச் சயங்கொண்டான் தனக்(கு)
அணியும்
நந்தாப் புகழ்மாலை நகரத்தார்க்(கு) ஓம்படையாய்
செந்தாதார் கடம்பன் வேள் திருவருளால்
திகழுகவே!"

—க. கிருட்டினமூர்த்தி.

"ஒப்பரிய முத்தப்ப உரவோனை ஈன்ற புகழ்
செப்பரிய நேமத்தின் செயங்கொண்டானின்
பெருமை
இப்புவியோர்க்(கு) இனிது (உ)ரைக்கும்
இளவரசும், ஏழ்மரபும்
செப்பு புகழுடன் அறங்கள் செய்தென்றும்
வாழியவே!"

—புவித்தொண்டன்.

## நினைவுரை

இந்நூலைக் கையுறையாகப் பெறும் அமரர் சிவத் திரு, நா. அ. அண்ணாமலை செட்டியார் அவர்கள் ராங்கியத்தில், சிதம்பர விநாயகர் திருவடி மறவாத வ. நா. வகையில் திருவாளர் நாகப்பசெட்டியாரும், திருமதி நாச்சம்மை ஆச்சியாரும் செய்ததவப்பயனாக துன்முகி ௵ தை மாதத்தில் (ஜனவரி 1896) திருமாலின் நட்சத்திரமான திருவோணத்தில் பிறந்தார்கள். இவரோடு உடன் பிறந்தவர்கள் வள்ளியப்ப செட்டியார், பழனியப்ப செட்டியார், சொக்கலிங்கம் செட்டியார் ஆகியவர்கள். அவர்களில் தற்போது பழனியப்ப செட்டியாரும், சொக்கலிங்கம் செட்டியாரும் மற்றவர்களின் சந்ததியாரும் சிறப்புடன் திகழுகிறார்கள்.

நமது அண்ணாமலை செட்டியார் இளமையில் கற்பன கற்று, கற்றபடி நின்று, பெரிது முயன்று பெரும் பொருள் ஈட்டி, செட்டுடனும் சிவனடி மறவாத சிந்தையுடனும் வாழ்ந்து தெய்வானை ஆச்சியை மணந்து அறம் வழுவாது நடத்திய இல்லறத்தின் பயனாக ஐமுகவனுக்கு ஆறுமுகம் பிறந்ததுபோல், நாகப்பன், குமரப்பன், வள்ளியப்பன், சிதம்பரம், நாச்சியப்பன், சுப்பிரமணியன் என்ற ஆண் மக்களும், நாகம்மை என்ற பெண் மகளும் பிறந்து, மணம் பெற்று மக்கள் மனைசெல்வங்கள் மல்க வாழ்ந்து வருகிறார்கள். சென்ற துன்முகி-௵ தை-மீ 18-உ (31—1—1957) அன்று அறுபதாண்டு சாந்தி மணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவர்கள் கானாட்டுத் தொலையானூரில் மீனாட்சி சுந்தரர் கோவிலை தம்பி, சொக்கலிங்கம் செட்டியாருடன் சேர்ந்து

அமைத்துள்ளார்கள். மேலும், ராங்கியத்தில் ஊராட்சி மன்றத்தைத் துவக்கி அதன் தலைவராக பல ஆண்டுகள் இருந்து பல நற்பணிகள் செய்தார்கள். மேல் நிலைத் தண்ணீர்த் தொட்டியை நிறுவுவதற்குப் பெருந் தொகை அளித்துள்ளார்கள். சிவகாமி அம்பாள் உயர் நிலைப் பள்ளியை நிறுவி, அதன் வளர்ச்சிக்கு இவர்கள் செய்திருக்கும் சேவை மிகவும் பாராட்டத் தக்கது. நேமம் கும்பாபிசேக நகர விருந்துச் செலவைத் தான் ஏற்றுக்கொள்வதாக வாக்களித்தார்கள். இன்னும் பல அறப்பணிகளையும் செய்து வந்த நமது அண்ணமலை செட்டியார் மதுரை பாங்கின் டைரக்டராக இருந்து வர்த்தகத் துறையிலும் சேவை செய்து வந்து, நாளது சார்வரி - ஞு ஐப்பசி - மீ 3 - உ (19-10-1960) தீபாவளி நன்னளில் இரவு 8-மணிக்கு சிவபதவி அடைந்தார்கள்.

அறப்பணிச் செல்வர் அண்ணமலை செட்டியார் அவர்கள் நினைவாக எழுதப்பெற்ற "நேமம் தல புராணம்" 29-ம் பாடலிற் கூறியவாறு, அவர்கள் மண்ணுலகில் வாழ்ந்த ஆண்டுகளையும் சிவபெருமானின் அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் நினைவூட்டும் வகையில் 64 பாடல்களாகவே அமைந்ததும் செயங்கொண்டார் திருவருட் செயலே யாகும். தங்கள் தந்தையார் செய்ய நினைத்தவைகளை அவரது செல்வ மக்கள் நிறைவேற்றிவருவது மிகவும் போற்றத்தக்கது. அண்ணமலை செட்டியார் ஆன்மா சாந்தியுற செயங்கொண்டாரை வேண்டி இந்த மலரைச் சமர்ப்பிக்கிறேன்.

சார்வரி-தை-க.
14-1-61
பிரதோஷம்

நாராயண-நடராசன்

ஓம்

தமிழுக்கு வெற்றி!

மரகத விநாயகர் மலரடி போற்றி!
செயங்கொண்ட சோழீசர் சேவடி போற்றி!
செட்டி முருகன் திரு அடி போற்றி!

## நேமம் நகரத்தாருக்குத் திருமுகங்கள்

" இத்தரை முழுதும் இசைபெறும் நம்மீர்!
முத்தப்பன் யான் மொழிவது கேண்மின்!
செந்தமிழ்ச் செல்வச் சீமான், இவர் தாம்
வளம்பெறு(ம்) நிம்பை மார்த்தாண்டப் புலவர்
மடப்பளி அடுப்பு மறந்தது தொழில்; அதில்
ஆம்பி பூத்ததாம்; ஆதலினுல் இவர்
நம்பால் உற்றனர் நாவலர் இவற்கே
வேண்டும் பரிசில் விரும்புவ அளித்தும்
ஆண்டு இவர் வறுமை நோய் அறவே களைந்தும்
சிறப்புற அனுப்புவீர் சீரார் நேம
நகரில் குபேர நலம் படைத்தோரே!"

இப்பாடலுடன் நேமம் சென்ற வேம்பத்தூர்த் தமிழ் வேந்தர் நகரத்தார் செய்த உபசாரங்களாலும் அளித்த பெரும் பரிசாலும் அகம் மகிழ்ந்தார்.

— ஒரு சிலேயை

" வில்லாய் வளைத்த செயங்கொண்டார் திருவருளால்
எல்லோரும் வாழ்வீர்! இருந்து!"

— முத்தப்பர் வரலாறு



## ஆசிரியர் திருமுகம்

"திட நேமச் செயங்கொண்ட செல்வத்
தனவணிகீர்!
நடராசப் பாவலன் யான் நவில்வது கேட்டருள்
செய்மின்!
முத்தப்பன் திருமுகத்தை முதுபேரன்பால் ஏற்றுச்
சித்த நிறைவுடன் பரிசில் சேர அளித்(து) ஒப்பற்ற
புகழ் பெற்றீர்! திருமதுரை பொலிவுபெற
அறம் வளரத்
திகழ்ந்திலகு சைவ நெறி செந்தமிழோ(டு)
இணைந்(து) ஓங்க
ஏன்ற பணி செய்து (உ)லகில் ஏழு நகர் வணிகர்
புகழ்
சான்ருண்மையுடன் பரப்பும் தமியேன்;வயிரவனும்
நல்லன்பன் வேண்டச்செய் நவமுறைப்
புராணமிதை
கல்வெட்டுச் செய்திகள்; சா. கணேசன்
வழியறிந்து
செயங்கொண்ட நேமத்திருக்கோயில் வரலாற்றை
வயங்கொண்ட அண்ணுமலை நினைவாய்
வழங்கினஞல்:
உற்றுணர்ந்து பேறுகள் நீர் ஓர் எட்டும் எட்டும்
எய்திப்
பெற்றுப் பெருகிப் பெயர் நிறுத்திச் செயங்
கொண்ட
நல்லான் திருவருளால் நால் எட்டு அறம்
வளர்த்து
வல்லாராய் வாழ்வீர்! மகிழ்ந்து!"

"அணிபணியார் செயங்கொண்டாரருளால் ஏழூர் நகர
வணிகர் எலாம் வாழி! மகிழ்ந்து"

## என்ன செயங்கொண்டார் இவர் ?

ஓங்கு பத்மா சூரனைக் கண்(டு) ஓடி ஒளிந்தார்
விசயன்
வாங்கு தனுவால் பூசை வாங்கினர் -- ஈங்(கு)
இருக்கும்
நன் நியமச் சோழீசனுர் செயங்கொண்டார்
என்ருல்
என்ன செயங்கொண்டார் இவர்? ''
— ஊனையூர்ப் பாரதியார் கேள்வி

விடை கூறி, முத்தப்பர் பாடிய பாடல் :

''என்ன செயங்கொண்டார் இவர்? என்ருன்
முப்புரத்தைச்
சொ(ர்)ன்ன மயமாய்ச் சமைத்த சோழீசர் –
பின்னும்
சிரித்துச் செயங்கொண்டார்; சித்தசனைக்
கண்ணுல்
எரித்துச் செயங் கொண்டார் இவர்''

''தென்னேமம்'' ''சீர் பொருந்தும் தென்னேமம்'' ''தருவை நிகர் தென்னேமம்'' 'செம்பி நன்ஞட்டவர் புகழும் தென்னேமம்' 'காஅடரும் தென்நேமம்' 'வாவி திகழ் தென்னேமம்' ''தெட்சணமாமுனி பரவும் தென்னேமம்' 'செகத்தரசர் புகழ வரும் தென்னேமம்' ''கல்யாண முர(சு) ஒலிக்கும் தென்னேமம்''

— செயங்கொண்டார் சதகம்

— அள்ளி நிதி

செய்யும் நியமச் செயங்கொண்ட சோழீசர்
தையல் சவுந்தரியைத் தாள்பணிவோர்''
– திருமுக விலாசம்.

ஓம்

# செயங்கொண்டார் பஞ்சாட்சரத் தோத்திரம்

பாடுவார் முத்தப்பையா
திரு மதுரை (கீழச்) சிவப்பட்டி
விபவ–தை–1 ம் நாள் ( 14—1—1808 )
நேமம் திருக்கோயிலில் அரங்கேறியது.

1 " நன்றே பெருக! நவிலும் குபேர நகர் வணிகர்
என்றே உலகம் புகழ! அவர்க்(கு) ஈண்(டு)
இருநிதியம்
நின்றே நிலவ! அறமும் கனமும் நெடிதுபெறத்
தொன்றே சோழீசர் செயங்கொண்டார் பாதம்
துதிக்குதுமே !"

2 "மன்னும் பெருமை பெருகிக் குபேர நகர் வணிகர்
என்னும் மகிமை உறவும் வறியவர்க்(கு)ஈந்திடவும்
பொன்னும் பொருளும் புவியும் முப்போகமும்
பொருந்திடவும்
துன்னும் சோழீசர் செயங்கொண்டார் பாதம்
துதிக்குதுமே! "

3 " சிவன் ஆலயமும் திருமால் பணியும்
சிறப்புறத்தான்
நவ(ம்)ஆய்ப்புதுக்கியும் ஆக்கியும் மேலோர்
நவிலு(ம்) நல்ல
தவம் ஆம் இ(து) எனத்தரணியில் ஓங்கவும்
தாங்கு மகத்
துவமா(ர்) சோழீசர் செயங்கொண்டார் பாதம்
துதிக்குதுமே !"

4 " வந்தார்க்(கு) உதவும் வணிகர் குபேரனும்
வளமையற்கும்
பிந்தார் தனத்தில் இவரே உலகில் பெரியர் எனச்

சிந்தார் புர(ம்) இளையாற்றங்குடியார் சிறப்புறவும்
சொந்தார் சோழீசர் செயங்கொண்டார் பாதம்
துதிக்குதுமே !''

5 ''யவனம் கலிங்கம் தமிழ் சிங்களம் யாண்டும்
உள்ள
புவனம் எலாம் இவர் வர்த்தகம் ஓங்கவும்
புண்ணியம் சேர்
தவமும் திருவும் தங்க வணிகர் தரம் பெறவும்
துவச(ர்) சோழீசர் செயங்கொண்டார் பாதம்
துதிக்குதுமே !

## செயங்கொண்டார் அட்டாட்சரத் தோத்திரம்

(இளவரசன். நா. நடராசன் -திருமதுரை(கீழச்) சிவப்பட்டி)
சார்வரி-கார்த்திகை-22ம் நாள் (7–12–60)
புனர் பூசத்தன்று அரங்கேறியது.

1 ''நன்மை மல்க! நிதிக்கோன் தான்
நல்ல குலம் என்(று) எ(ண்)ணிப் பிறந்த
தன்மைப் புகழார் தனவணிகர்
தமிழும் சிவனுர் தவநெறியும்
நன்மை அறங்கள் நால் எட்டும்
நாட்டில் வளர்த்தே நாட்டம் உடன்
மன்மை பெறவே செயங்கொண்டார்
மலர்ச் சேவடிகள் வாழ்த்துவமே!''

2 ''ஓம்'' எப்பொருட்கு(ம்) முதற் பொருளாம்;
''உகரம்'' நடுவாம்; ''அம்'' முதலாம்
சேமம் தரும் மந்திரக் குழுவில்
சிறந்த தலைமை நாத மந்த்ரம்
ஆம்; ''ஓம் மனுவே முதல் மனு'' என்(று)
அறிந்தார் நகரத்தார் வாழ்ந்து
நேமம் சிறக்கச் செயங்கொண்டார்
நிமலப் பதங்கள் நினைவோமே !''

3 "மன்னர் அமைத்த திருக்கோயில்
மரபால், பணியால் பின்னவராய்
மன்னும் உரிமை, கடமை என
மனத்தில் எண்ணிப் பணி செய்யும்
தென்னர் சிவகோத்திர வணிகர்
செகத்தில் சீராய்த் திகழ்ந்திடவே
பொன்மை மேனிச் செயங்கொண்டார்
பொற்பதம் நாளும் போற்றுவமே!"

4 "நாடு கோட்டை நகர் மூன்று
நலங்கள் உடையார் நல் அறத்தால்
தேடும் புகழார்: சோணாட்டுச்
சேரும் புகழார்: சீரகத்தார்
சூடும் புகழார்: தென்பாண்டித்
துரைமாவணிகர் சுகம் பெறவே
ஆடும் புகழார்: செயங்கொண்டார்
அடிகள் நெஞ்சில் அணிவோமே!"

5 'ராம' என்னும் இரண்(டு) எழுத்தை
நாளும் ஏத்தும் நகர் வணிகர்
சோமன் அணியும் சிவனார்தம்
தொன்மைப் பஞ்சாட்சரப் பயனும்
வாமத் திருமால் எட்டெழுத்தால்
வாய்க்கும் பயனும் வாழ்வும் உற
நேமத்(து) இறைவர் செயங்கொண்டார்
நேரார் பதங்கள் நினைவோமே!"

6 "யவமாம் சாலி, நவதான்யம்,
நற்பத்திரங்கள் கொண்டுயக்கும்
தவமாம் பூசை பலவிதமும்
சகம் வாழ்ந்திடச் செய்தமிழ் வணிகர்
நவமாம் வாழ்வில் திகழ்ந்(து) என்றும்
நல்லோர்ப் புரந்து நயம் பெறவே
துவமான் ஏந்தும் செயங்கொண்டார்
தொன்மைப் பதங்கள் துதிப்போமே!

7 "(நா)ணும் பொன் தேடுவதும்
நம்பன் அடியார் நயப்புறவே
(வா)ணும் சீர்ப்பணிக்(கு) என்றே
மனத்தால் எண்ணும் மதி வணிகர்
(மா)ணுப் பெருமை மன் இணையும் மரியாதையும்
சேர் வாழ்வுறவே
சோணசலராம் செயங்கொண்டார் துங்கத்
திருவடி தொழுவோமே!"

8 "யத்தனத்தால் ஏதொன்றும்
நடவா(து) எல்லாம் இறை செயலே
அத்தன் நினைவைச் செயலாக்கும்
அடியாரே நாம் என்(று) அறிந்தார்
வித்தம் பெற்றே அறம் வளர்க்கும்
வேள் வணிகர் இம்மேதினியில்
நித்தம் வாழச் செயங்கொண்டார்
நிகரில்பதங்கள் நினைகுவமே!"

---

## பிற நூற் குறிப்புகள்

"இளமை நேமம்"

"பாமணக்கும் முத்தப்பன் பாவலஞர் வாக்கு
மிகச்
சேம(ம்) உற்று ஓங்கி வரத் தேறு சூழ்ந்(து)
இலங்கும்
நேம நகரச் சோழீசர் நேர்மையுடன் தந்த திருக்
கோமகனே! எங்கள் குலக் குஞ்சரமே!
கண் வளராய்!"

— தன வணிகர் தாலாட்டு

"கருது நேமம் செயங்கொண்ட சோழீசர் பங்(கு)
அமர் சவுந்தரியும் வாழி!"

– வணிகர் வாழ்த்து.

"களைப்(பு) ஆற்றும் நன் நேமம்"

– வணிக மண்டல சதகம்.

" சோதி வெண் பிறைக் கோடு (உ)ழக்கிழிந்து
அடைசொரி தேன்
மோதும் மூவகைக் கனிகளும் நறவொடு முடுகிக்
கோதிலா மது நதி எழச் சாலிகள் கொழிக்கும்;
ஆதலால் இதை "நியமம்" என்(று) உரைக்கும்
இவ் அகிலம் "
— சங்கிரக ராமாயணம்

" கேரள சிங்க வளநாட்டில் நேமம் ஆகிய குலசேகர புரத்தில் தேனுறு பாயும் இளநலம் உடையார்
— இசை குடி மானம்

"இத் திருத்தலம் (நேமம்) மிகப் புராதனமான பெருமை உடையது. சிவபெருமான் திரிபுரத்தைச் சிரித்துச் செயங்கொண்ட ஐதீகத்தின் பெயரால் இக் கோவில் மூலலிங்கத்துக்கு " செயங்கொண்ட சோழீசர் " என்னும் திருநாமம் விளங்குகிறது "
— ஒன்பது கோயில்கள் விளக்கம்

**ஞானத் தமிழ் புரிந்த நல்லார் வேட்கை:**

பிழைப்பு வாய்ப்(பு) ஒன்று அறியா நாயேன்
குழைத்த சொல்மாலை கொண்டருள் போற்றி!
—மணிவாசகர்

"விரைவிடை இவரு(ம்) நினைப்பிறவாமை
வேண்டுநர் வேண்டுக; மதுரம்
பெருகுறு தமிழ்ச்சொல் மலர் நினக்(கு) அணியும்
பிறவியே வேண்டுவன் தமியேன்"
—சிவப்பிரகாசர்

"பாடும் பணியே பணியாய் அருள்வாய்!"
—அருணகிரியார்

"என்னை நன்றாக இறைவன் படைத்தான்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"
— திருமூல

ஓம்
செயங்கொண்ட சோழீசர் துணை

# நேமம் தல வரலாறு.

"சீர் பொருந்தும்"
"நகரமெலாம்"
"செயங்கொண்ட"

"ஆண்டவனுய் அகிலமெலாம் அளித்து, ஆண்டு, அழித்து அருளும், தாண்டவனுர் பழம் பதியாம் தண்பாண்டி வளநாடு" என்று ஆன்றோர் புகழும் செந்தமிழ்ப் பாண்டித் "தேயத்தில் "செந்தமிழை, மேலாம் சிவநெறியைப் பேணுதற்காய்- வந்த தனவணிகர் வாழ்ந்து, எண்ணுன்கு அறம் வளர்த்து இசை பெற்றிலங்குவது செட்டிமார் நாடு.

இந்நன்னாட்டில் பதினுன்கு பாண்டித் தலங்களில் திருப்புத்தூர், பிரான்மலே ஆகிய கொடுங்குன்றம், காளேயார்கோயில் ஆகிய கானப்பேர் ஆகியவைகளும் பாடல் பெற்ற சிவத்தலங்களோடு உடன் வைத்து எண்ணத்தக்க தொன்மை உடைய மாற்றூர், இளேயாற்றங்குடி, இரனியூர், பிள்ளேயார்பட்டி, சூரைக்குடி, வேலங்குடி, வயிரவன்பட்டி, இலுப்பைக் குடி ஆகிய நகரக் கோயில்களும், திருக்கோட்டியூர், திருமயம், அரியக்குடி முதலான வைணவத் தலங் களும், வேதாந்த மடாலயம் திகழும் கோயிலூர், பாதரக்குடி, கலாமடம், துலாவூர் முதலான உபதேச குரு தானங்களும் சரித்திர பிரசித்தியும் தல புராணங் களும் பெற்றுள்ள திருமதுரை கீழச்சிவபுரி, செந்தமிழ் மேலேச்சிவபுரி, தேவகோட்டை கண்டதேவி, காரைக் குடி, செயங்கொண்டபுரம், நாட்டரசன்கோட்டை,

பொன்னமராவதி, பூங்குன்ற வேலங்குடி, சோழபுரம், சுந்தரபாண்டியபுரம், குலசேகரபுரம், வீரபாண்டியபுரம் புதுப்பட்டி, புதுக்கோட்டை, அரிமழம், ராசநாராயண புரம், ஆற்காடு. ஆதன்குடி, பலவான்குடி, கொரட்டி' நாச்சியார்புரம் முதலான எண்ணற்ற நல்லூர்களின் அண்மையில் "நடு நாடு" என்னும் பேருடன் அரச வனத் தலமாய். குன்றுதோருடலில் ஒன்ருய், அண்ணுமலே நல் ஆதீனமும் அருள்நெறியும் பொலியத் திகழும் மயில் மலேயான குன்றக்குடிக்கு வடக்கே ஒரு நாழிகை வழி (ஒன்றரை மைல்) யில் கீழச்சிவப் பட்டிச் சாலேயில் சிவம் பெருக்கித் திகழுவது "நேமம்" திருத்தலம்.

நேமம் நகரக் கோவில் நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் ஒன்பது பொதுக் கோவில்களில் பழமையானதும் புகழ்பெற்றதுமாகும் பூங்குன்ற வேலங்குடியில் உள்ள நகரத்தார் சரித்திரக் கல்வெட்டிலிருந்து நேமம் கோயிலும் சேத்திர சுவாத்தியங்களும் தேறுைபாயும் இள நலம் உடைய நகரத்தார்களுக்கு கலியுக வருடம் 3815ல் சாலிவாகனசகம் 636. கி. பி. 7141-ல் ஏறத்தாழ 1250 ஆண்டுக்கு முன்னுல் சவுந்தர பாண்டிய ராசனுல் விட்டுக் கொடுக்கப்பெற்றதாகத் தெரிகிறது. ஆயினும் அண்மையிலுள்ள ஆற்காட்டில் தேனுற்றின் உற்பத்தித் தானத்தில் உள்ள மதுநதீசுவரர் கோயிலிலுள்ள கல்வெட்டுக்களிலிருந்தும், பாண்டியனின் தளபதியான கண்டன் உதயஞ் செய்தாருன காங்கேயன், நேமராசன் முதலாேரின் ஆட்சி பற்றியும் கோட்டைகள் பற்றியும் கூறப்பெறும் கர்னபரம்பரைச் செய்திகளிலிருந்தும் நேமம் கோயில் மிகப் பழமையானதென்றும், ஆதி ஆலயத்தில் கல்

வெட்டுகள் இருந்திருக்க வேண்டுமென்றும் ஊகிக்க இடமிருக்கிறது. ஆற்காட்டில் அகத்தியர் ஆலயப் பிரதிட்டை செய்திருப்பதாலும் குன்றக்குடியை வழி பட்டபோது, அகத்தியர் நேமத்தை வழிபட்டிருக்க வேண்டும் என்பது [''தெட்சணமாமுனி பரவும் தென் நேமம்'' என்று முத்தப்பையா செயங்கொண்டார் சதகத்தில் குறிப்பிட்டிருப்பதாலும்] தெளிவாகிறது.

கற்பனை கடந்த சோதியும், ஆதியும் அந்தமும் இல்லா அறவாழி அந்தணனும் செருக்குற்று உலவிய திரிபுரங்களைச் சிரிப்பால் எரித்த செம்மேனி அம்மானு மான செயங்கொண்ட சோழீசர் வீற்றிருந்தருளும் திருக்கோயிலுக்கு இன்று நடைபெறும் (சார்வரி–ஞூ தை-மீ 23உ (5—2—1961) அத்தம் குட முழுக்குக்கு முன் 1907-ல் மகா கும்பாபிஷேகமும், மற்றும் பல தடவைகள் அஷ்டபந்தன அபிஷேகங்களும் நிகழ்ந் துள்ளன. இன்று நடைபெறும் அபிஷேக விழா சிறப்புற, பல ஆண்டுகளாய்த் திருப்பணி மேற் பார்வையிலும், கும்பாபிஷேக ஏற்பாடுகளிலும், தேவகோட்டை திருவாளர்கள் உ. ராம. மெ. சுப சேவு. மெ. மெய்யப்ப செட்டியார், அ. லெ. லெட்சு மணன் செட்டியார். கோயில் சம்பந்தமான கிராம நிர்வாகங்களில் முத்தப்பையா பரம்பரையில் வந்த எ நா. காசிவிசுவநாதன் செட்டியார் முதலானோர் பெரும்பங்கெடுத்து கொண்டுள்ளனர்.

ஊரின் பெயர்கள்: 1. நியமம், 2. நந்தி (ராசன் பிரதிஷ்டை செய்த) புரம், 3. மதுநதிபுரம், 4. செயங் கொண்ட சோழபுரம், 5. மதுவனத்தலம், 6. குலசேகர புரம் 7 நேமம்.

"நியமம்" என்பது உயிரினும் பெரிதாக ஓம்பப் பெறும் ஒழுக்கம். ஒழுக்கத்தால் உயர்ந்த சான்ருேர் பலர் வாழும் ஊராதலால் சயங்கொண்டார் சதகம், திருமுக விலாசம், வணிகர் வாழ்த்து, நகர வாழ்த்து வணிக மண்டல சதகம், வணிகர் வரலாறு, இளசைப் புராணம், மாற்றூர்ப் புராணம், வயிரவன் கோவில் புராணம், சூரக்குடிப் புராணம், இலுப்பைக்குடிப் புராணம், மயூரகிரி மான்மியம், பிள்ளையார்பட்டித்தல வரலாறு, தன வணிகர் தாலாட்டு, வணிகர் தசாங்கம் முதலான நூல்கள் எல்லாவற்றிலுமே "நியமம்" என்ற பெயரே வழங்கப் பெறுகிறது.

## கோயில் அமைப்பு

கல்வெட்டுக்களில், "கேரள சிங்கவள நாட்டில், நேமநாட்டில், கீழ்க்குண்டாற்று, தேனூற்றுப்போக்கு" என்று குறிப்பிடப் பெறுகிறது. வெயிலுகந்தவிநாயகர் கோயிலுக்குப் போகும் வழியில் "கோட்டை மேடு" என்று வழங்கப்பெறும் இடத்தில் நேமராசன்' கண்டன், உதயஞ் செய்தான் ஆகியோரது கோட்டைகள் இருந்திருக்கலாம். நேமன் என்பவன் பொன்னமராவதியை ஆண்ட பொன்னனன், அமரனுடன் பிறந்தவன் என்றும் "நேமன் கோட்டையோ ஏமன் கோட்டையோ?" என்று நாட்டார் வியக்கும் வண்ணம் கோட்டை கட்டி ஆண்டான் என்றும், முடிவில் சகோதரர்களுடனேயே சவுந்திரபாண்டியனால் கொல்லப்பட்டான் என்றும் கர்ணபரம்பரைக் கதை கூறப்பெறுகிறது.

கிராம தேவதைகளும், சுற்றுக்கிராமத் தெய்வங்களுமாக எண்ணற்ற கோயில்கள் உள்ளன. இத்துடன் மேலேசுவரம் என்ற பழமையான சிவாலயமும்,

பழையாதங்குடிப் பகுதியில் சிவாலயமும் பெருமாள் கோயிலும் இருந்திருப்பதாகத் தெரிகிறது. மேற்படி கோயில்களிலிருந்த மேலேசுவரர், சக்கரம், சீதை, பெருமாள் முதலான சிலைகளும், விக்கிரகங்களும் எடுத்துப் பல ஆலயங்களில் வைக்கப்பெற்றுள்ளன.

வெயிலுகந்த பிள்ளையார் கோயில் நேமந்தான் கண்மாய்க்கரை தென்கோடியில் உள்ளது. மிகவும் வரப்பிரசாதியான இப்பிள்ளையார் சிலை பழமையின் சின்னத்தைப்பெற்றுத் திகழ்கிறது. மேலே விமானமும் கோயிலும் அமைக்கத் திருவுளம் இல்லை. மண்டபமும் சிதைந்துள்ளது. அண்மையில் திரவியதீர்த்த விசேடம் வாய்ந்த ஊருணி இருந்திருக்கிறது. செயங்கொண்டார் சதகத்தில் முத்தப்பையா இவ்விநாயகரையே முதலிற் கூறியுள்ளார்.

செயங்கொண்டாருக்கு கிழக்கே பார்த்த சன்னிதியும், சவுந்திரநாயகிக்கு தெற்கே பார்த்த சன்னிதியும், விசேடமூர்த்தியான வயிரவருக்கு மேற்கே பார்த்த சன்னிதியும், இரண்டு பிரகாரங்களும், திருமதிலும், தெற்கே பெரிய கோபுரமும் அமைந்துள்ளன. கிழக்கேயுள்ள ராஜகோபுரம் இனிமேல்தான் அமைக்கப்பெற வேண்டும். நீராழிப்பத்தி மண்டபத் தூண்களிலும் அணியெர்ட்டிக்கால் மண்டபத்தூண்களிலும் அட்ட வீரட்ட மூர்த்திகளும், மேற்படி தேவிமார்களும் அழகொழுகும் சிலைவடிவில் அமைக்கப் பெற்றுள்ளனர். இருபதுக்கு மேற்பட்ட ஊர்களில் எண்ணூறுக்கு மேற்பட்ட குடும்பத்தினராய் வாழும் நகரத்தார்களால் பொற்பணியினும் சிறந்த கற்பணியாய் அமைக்கப் பெற்றுள்ள இத்திருக்கோயில் சிற்பவேலைகள் மிக அற்புதமாய் அமைந்துள்ளன.

கோயிலின் எதிரே நகரத்தார் விடுதியும், களஞ்சியமும், கோவிற்பணியாளர் வீடுகளும், வடக்கே பள்ளிக்கூடம், நந்தவனம், பசுமடம், ஆகியவைகளும் திகழ்கின்றன.

பாடல் பெற்ற செயங்கொண்டார்

மதுரை சங்கத்தில் இறையனுர் என்ற பெயருடன் புலவர் தலைவனுய்த் திகழ்ந்த செயங்கொண்டாரைப் பாடிப் பரவிய புலவர்கள் எண்ணற்றவர்கள். புலவர் குலப்பொன்முடியும் கடாட்சகவியுமான பாடுவார் முத்தப்பையா செயங்கொண்டார்பேரில் பிள்ளைத் தமிழ், பதிற்றுப் பத்தந்தாதி, ஊசல், சதகம் மற்றும் பல பிரபந்தங்களைப் பாடியுள்ளார். சுவாமி முருகானந்தம், அரிமழம் கிருஷ்ணமூர்த்தி, நெற்குப்பை ராமசுப்ரமணிய பாரதி, கீழச்சிவல்பட்டி நா. நடராசன் செட்டியார் முதலான பலரும் பல நூல்களைச் செய்துள்ளனர். முத்தப்பையா நூல்களில் "செயங்கொண்டார் சதகம்" ஒன்றே அச்சாகியுள்ளது.

பொதுவாக உலகில் யார் எத்தனை தூரம் கட்டிக் கொடுத்தாலும் பேணிவைப்பினும் செல்வம் வழிவழியாக நிலைப்பதில்லை. ஆனல் "காணி காணியாக ஈட்டிக் கோடி கோடியாகத் தருமம் செய்யும்" இயல்பு வாய்ந்த நமது நகரத்தார் செய்த தவப்பயனுலும், அருள் வாக்காளர் முத்தப்பையா "என்றைக்கும் நீங்கா(து) இரு" என்று இலட்சுமிக்குக் கட்டளையிட்டபடியாலும் பொதுவாக ஏழுவகை, இருபத்தோரு கோத்திரமும், ஒன்பதுகோவிலும் உடைய நகரத்தார்கள் அனைவரும் சிறப்பாக, தேனுறுபாயும் இளநலம் உடைய நேமம்

நகரத்தார்களும் மகாயோக, பாக்ய சம்பன்னர்களாய், திருப்பணிச் செல்வர்களாய், தமிழ் நாடு முழுவதும், இந்திய நாட்டிலும், இலங்கை, பர்மா, மலேயா, தாய் லந்து இன்னும் உலகின் பல பகுதிகளிலும், முப்பத்தி ரண்டு தர்மங்களையும் பரிபாலித்து வாழ்ந்து வருகிறார் கள். இன்னும் "சென்றகாலத்தின் பழுதிலாத் திறனும், இனி எதிர்காலத்தின் சிறப்பும்" வாய்ந்து, "முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழமையராய்ப் பின்னைப் புதுமைக்கும் பெயர்த்தும் அப்பெற்றியராய்" செயங்கொண்ட சோழீசர் திருவருளால் சிறப்புற வாழ் வது திண்ணம் என்ற நினைவுடன் முத்தப்பையாகூறிய வாழ்த்தினைக் கூறி இதனை நிறைவு செய்வோமாக!

—ஒரு சிலையை
வில்லாய் வளைத்த செயங்கொண்டார் திருவருளால்
எல்லாரும் வாழ்வீர் இருந்து!"

நல்லார் புகழ் கூறி நால் எட்(டு) அறம் வளர்க்கும்
வல்லாரே செவ்வேள் மரபினரே!—சொல்லாரும்
கல்லானை தின்னக்கரும்(பு) அளித்தான் கண் அருளால்
எல்லாரும் வாழ்வீர் இருந்து!"

"மாவாழும் ஏழுவழி நகரத்தார்க்(கு) என்றும்
கோவாழும் செல்வக் குலதெய்வ—மா(ய்) வாழ்
மரகத விநாயகனை மாமலர் தூய் வாழ்த்த
வரநல வாழ்(வு) எல்லாம் வரும்" —(நகரத்தார் சரித்திரம்)

"உலகெலாம் வாழி வாழி! ஒன்பது நகரக் கோவில்
வலமுள பரமன், அம்மை மரகத விநாயகன் சீர்
நலமிகு முருகன் வாழி! நாளும் சந்தானம் பல்கி
மலர்மகள் அருள் பெற்றேழு வழி நகரத்தார் வாழி!"

—(நகரத்தார் சரித்திரம்)

## கோத்திரத்துப் பெருமக்கள்

"திருமுக விலாசம்" என்ற ஒப்பற்ற அருள் நூலைப்பாடி வணிகர் சமுதாயத்துக்கு பெருவாழ்வுதந்த பாடுவார் முத்தப்பையா நேமங்கோயிலைச் சேர்ந்தவர்; முத்தப்பையாவைப் பெற்றதொன்றே நேமத்திற்குப் பெரும்புகழ் தருவதாகும். மேலும் தானங்களில் எல்லாம் தலை சிறந்ததான அன்னதானத்தை சுமார் 400 ஆண்டுகளுக்கு முன் பழனியில் தொடங்கி "அன்னதான மடத்தை" நிறுவிய குமரப்பஐயாவும் நேமம் கோயிலாரே, இளையாற்றங்குடி ஒக்கூராருக்கு நகரத்தார்களில் முதல் விபூதி மரியாதை ஏற்படக் காரணமான நிகழ்ச்சியும் நேமங்கோயில் அருணசலம் செட்டியார் மகள் முத்து மீனாளால் நிகழ்ந்ததே. இவ்வாறு நகரத்தார் சரித்திரத்தின் முக்கியப் பகுதிகளிலெல்லாம் நேமங்கோயிலார் கலந்து கொண்டுள்ளனர்.



"ஏரோங்கு பொழில் புடைநேம, எழிற் பதியின்
மூவுலகும் இறைஞ்சி ஏத்தப்
பாரோங்கு வளங்கள் எலாம் பல்கச் செல்வம்
படைத்த தனவணிகர் குலம் செழித்து வாழ
நீரோங்கு சடாமகுடச் செயங்கொண்டாரின்
நிலவு திரு ஆலயத்தின் மேவுகின்ற
சீரோங்கு செயங்கொண்ட விநாயகன் தன்
திருவடித் தாமரை மலரைச் சிந்தை சேர்ப்பாம்.

## புலவர் பெருமக்கள்

கல்வி ஒன்றே உலகில் நிலைபெற்ற செல்வம். திருப்பணிகளும் அறங்களும் செய்த அரசர்களை-செல்வர்களைத் தவிர மற்றவர் பெயரே வரலாற்றில் வருவதில்லை. ஆனால் இலக்கிய வரலாற்றில் கல்விமான்கள் பெயர் வராதிருக்க வழியில்லை. அழியாத புகழ் நூல்களைச் செய்த அறிவாளர்களை என்றென்றும் மறக்க இயலாது. அத்தகையாரிலே தலைசிறந்த **பாடுவார் முத்தப்பையா** பிறந்த நேமங்கோயிலில் தற்போது புகழோடுபொலியும் புலவர்களில் சிவபூசாதுரந்தரும், தமிழ் வள்ளலுமான தேவகோட்டை உ. ராம. மெ. சுப. சேவு. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்களும் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில், கீழைத் திசைக் கழக அதிபராய் விளங்கும் நெற்குப்பை முத்தமிழ் வித்தகர், பண்டிதமணி, லெ. ப. கரு. ராமநாதன் செட்டியார் அவர்களும் குறிப்பிடத்தக்கவர்கள்.



## நேமம் கோயில் நகரத்தார் வாழ்கிற ஊர்கள்

1 காரைக்குடி
2 செயங்கொண்டபுரம்
3 தேவகோட்டை
4 சண்முகநாதபுரம்
5 செம்பொன்னூர்
6 அரண்மனை சிறுவயல்
7 கல்லல்
8 கோட்டையூர்
9 பள்ளத்தூர்
10 கானாடுகாத்தான்
11 அரிமழம்
12 பலவான்குடி
13 நெற்குப்பை
14 வேந்தன்பட்டி
15 மேலச்சிவப்பட்டி [மேலச் சிவபுரி]
16 வலயபட்டி [வலம்புரி]
17 உலகம்பட்டி
18 ராங்கியம்
19 கீழச்சிவப்பட்டி [திருமதுரை]
20 கண்டனூர்

மொத்தம் 800க்கு மேற்பட்ட புள்ளிகள் வளர்ந்தேறி வாழ்கிறார்கள். காரியக்காரர்கள் 25 பேர். ஆண்டுக்கு 5 பேர். 5 ஆண்டுக்கு ஒரு முறை. வெகு தானிய வருஷம் முதல் பழைய காரியக் காரர்கள் 12 பேருடன் மேலும் 13 பேர் சேர்க்கப்பெற்று, ஆண்டுக்கு 1 முதல் 5.6 முதல் 10.11 முதல் 15.16 முதல் 20.21 முதல் 25 வரை வரிசையில் அவ்வக் குடும்பத்தில் வயதாலும், அனுபவத்தாலும் முதிர்ந்தவர்கள் ஐந்தைந்து பேர் கூடிச் சிறந்த முறையில் நிருவகித்து வருகிறார்கள்.

1 நெற்குப்பை. கு. பழ. சு. வகை
2 ஷை ப. ராம. லெ வகை
3 மேலைச்சிவப்பட்டி. சி. ஆ நா. & கும. சொ. ராம. வகை (2)
4 ஷை நா. ஆ சி. வகை
5 கீழைச்சிவப்பட்டி. அழ மு. வகை

(ஐவரும் ஓர் ஆண்டு)

6 வலயபட்டி. குழ. அடை. வகை
7 ஷை ந. மு. வகை
8 வேந்தன்பட்டி. ந. ந வகை
9 ஷை நா. அரு. வகை
10 ராங்கியம். வ. நா. வகை

(ஐவரும் ஓர் ஆண்டு)

11 காரைக்குடி நா. நா. வகை
12 கண்டனூர். தெ. அரு வகை
13 பள்ளத்தூர். தெ. அ & தெ மு. & மு. பி. வகை(3)
14 ஷை அரு. மு. நெ. சு. வகை
15 கானாடுகாத்தான் அள. சு. வகை

(ஐவரும் ஓர் ஆண்டு)

16 அரிமழம். சி. ராம. வகை
17 ஷி மு. செ வகை
18 கோட்டையூர். கு. கரு. வகை
19 ஷி கு. மு. வகை
20 ஷி கு. வீர. வகை
(ஐவரும் ஓர் ஆண்டு)

21 காரைக்குடி. அரு. அ. வகை
22 ஷி வீர. அ. வகை
23 ஷி கரு. வ. கரு வகை
24 தேவகோட்டை. உ. ராம. மெ. வகை
25 ஷி உ. ராம உ. வகை
(ஐவரும் ஓர் ஆண்டு)

காரைக்குடியில் 4 பேர். தேவகோட்டையில் 2 பேர் கோட்டையூரில் 3 பேர். பள்ளத்தூரில் 2 பேர். கானாடு காத்தானில் ஒருவர். அரிமழத்தில் 2 பேர். நெற்குப்பையில் 2 பேர். வேந்தன்பட்டியில் 2 பேர். மேலைச் சிவப்பட்டியில் 2 பேர். வலயபட்டியில் 2 பேர். ராங்கியத்தில் ஒருவர். கீழைச்சிவப்பட்டியில் ஒருவர். கண்டனூரில் ஒருவர் ஆக 25 பேர்கள்.

## சொத்துக்களும் நிருவாகமும்

கோயிலுக்கு சுமார் 500 ஏக்கர் வரை நஞ்சை, புஞ்சை, தென்னந்தோப்புகள் உள்ளன. நகரத்தார்கள் தரும் திருவிளக்குக் காணிக்கை, கட்டளைப் பணங்கள் கிராம வருமானத்திலிருந்து பூசைபடித் தரங்களும், உற்சவங்களும் சிறப்பாக நடத்தப் பெறுகின்றன.

சுவாமி பெயர்கள்: 1 செயங்கொண்டார் 2 செயங்கொண்டசோழீசர், 3 நேமநாதர். 4 தேனுறுடையார்.

அம்மை பெயர்: 1 சவுந்தரநாயகி.

விநாயகர் பெயர்கள்: 1 மாணிக்கவிநாயகர், 2 செயங்கொண்ட விநாயகர்.

முருகன் பெயர்கள்: 1 கிருபாந்தகமூர்த்தி, 2 சுப்பிரமணியர்.

பரிவார தேவதைகள்: 1 விநாயகர், 2 தட்சணுமூர்த்தி, 3 நால்வர், 4 கன்னி விநாயகர், 5 சோமேஸ்வரர், 6 மேலேசுவரர் (மேலேசுவரி), 7 பெருமாள் 8 அண்ணுமலையார் (லிங்கோற்பவர்), 9 சுப்ரமணியர் (வள்ளி, தெய்வானை), 10 கஜலட்சுமி (துர்க்கை, சரசுவதியுடன்), 11 பிரம்மா. 12 துர்க்கை, 13 சண்டிகேசுவரர், 14 வயிரவர், 15 தனியம்மை, (சவுந்தரநாயகி) 16 நவக்கிரகங்கள், 17 சந்திரன், 18 சூரியன், 19 நந்தி 20 விசுவநாதர்(விசாலாட்சி) பலி பீடம், துவாரபாலகர் இரண்டாம் பிரகாரத்தில் 1 விநாயகர், 2 சுப்ரமணியர், (சோழ தீர்த்த வடகரையில்) விநாயகர்.

உற்சவ மூர்த்திகள்: 1 நடராஜர், 2, சிவகாமவல்லி (ஆவுடையம்பிகை), 3 நர்த்தன சுந்தரர், 4 விநாயகர், 5 சோமாஸ்கந்தர், 6 அருணுசலேசுவரர், 7 தெட்சிணுமூர்த்தி, 8 அப்பர், 9 சுந்தரர், 10 சம்பந்தர் 11 மாணிக்கவாசகர், 12 சுக்கிரவார அம்மன், 13 சந்திரசேகரர், 14 சுப்பிரமணியர், 15 வள்ளி, 16 தெய்வானை, 17 பிரதோட நாயகர், 18 அழகிய நாச்சியம்மன், 19 சண்டீசுவரர், 20 பள்ளியறை மூர்த்தி 21 சக்கரம், 22 சீதை. (அனைத்தும் பஞ்சலோகத்தால் ஆனவை.)

வழிபட்டவர்கள்: 1 அகத்தியர் 2 தெட்சணமா முனி 3 செயங்கொண்டான் 4 சவுந்தர பாண்டியன் 5 குலசேகரன் 6 நந்திராசன் 7 நேமராசன் 8 தளபதி கண்டன் 9 அருணகிரியார்

சுற்றுக்கிராம தேவதைகள்: 1 ஆற்காடுடையார் (மதுநதீசுவரர்-மங்கள நாயகி), 2 வயிரவர், 3 சிலந்தான் பிள்ளேயார், 4. வெயில் உகந்த விநாயகர், 5 அழகாபுரிப் பிள்ளேயார் 6 அரு. அ. பிள்ளேயார் 7 சேவகப் பெருமாள் ஐயனர் 8 உகந்தான் ஐயனர் 9 காடப்பிள்ளே ஐயனர் 10 பள்ளிமடை விநாயகர் 11 நெம்மேனி அம்மன் 12 அந்தரநாச்சி அம்மன் 13 கருப்பர் 14 நொண்டிக் கருப்பர் 15 ஆற்றுப் பிள்ளேயார்.

தந்தி & அஞ்சல் நிலேயம் : குன்றக்குடி.
பள்ளிக்கூடம் : ஆரம்பப் பள்ளி (நெம்மேனி ஏந்தல் at நேமம்)
ஜனத்தொகை : சுமார் 1000.

தனிப்பட்டோர் அறங்கள்: தேவகோட்டை சிவத்திரு. மலேயாண்டி செட்டியார் ஆயிரம் வராகனுக்கு மேல் செலவிட்டு நந்தவனத்தைச் சீர்திருத்தி நடத்தி வருகிருர்கள்.



# "நேமம் தல புராணம்"

சார்வரி - தை - க.

14—1—61ல் அரங்கேற்றப்பெற்றது.

"வாகைபெறு செயங்கொண்டான் நேமநகர்
வரலாற்றை வகுத்துரைக்கத்
தோகையடிக் கணபதியை வெயிலுகந்த
நாயகனைத் துதித்து வாழ்வாம்."

"மலைமகளாய் உலகீன்ற கன்னிவளர்
நேமநகர் வளங்கள் கூறக்
கலைமகளாம் வெண்தாமரைக் கன்னி
தனை நெஞ்சிற் கருதி வாழ்வாம்."

"செயங்கொண்ட தனவணிகச் சீராளர் வாழ்ந்(து)
இலங்கும் செட்டிநாட்டில்
நயங்கொண்ட நவதளியுள் நன்நியமத்தார்
வாழும் நல்லூர் ஆகி
வயங்கொண்ட பொன்வில்லை, மதிக்கீற்றை
ஏற்(று) இளசை வணிகர் வாழ்த்தும்
செயங்கொண்டார் வாழ்நகராம் தென் நேமப்
பெருமையினைச் செப்பி வாழ்வோம்!"

(அவையடக்கம்)

"என்றும் உளம் செயங்கொண்டார் பால் வைத்தீர்!
இராங்கியத்தில் இசைநேமத்தில்
ஒன்றும் சீர்நாகப் பன்மகன் அண்ணா
மலை நினைவாய் உயர்ந்த மக்கள்
நின்றிசைக்க வயிரவனின் துணையினாலே
நீர் ஒதுக்கிப்பால் அருந்தும் நியாயத்தாலே
நன்றொழிய வேறேதும் அறியேன் சொன்னேன்
நயமனத்தால் ஏற்றருள்வீர் நகரத்தாரே!"

## ஆற்றுப் படலம்

1 "மலயமுனி ஆற்காட்டில் மகிழ்ந்து
(உ)றையும் மாசிவனின்
தலையகத்தே முழுக்காட்டும்
தமிழ்நறவம் பெருக் கெடுத்துப்
புலயவனரும் மயங்கப்
பொற் கவிதைபோல் இனிக்கும்
தலையான சுவைநீரைத்
தந்தளிக்கும் தேனாறே!"

2 "கந்தரத்து நஞ்சென்னக்
கடல்மேய்ந்து கறுத்துறுமி
எந்தலைவன் டமருகம் போல்
இசைமுழக்கி ஏழ்உலகும்
நிந்தையற்று வாழ்ந்துலகில்
நியமமுற மழைபொழியும்
செந்தமிழ்சேர் திருச்செயலால்
சிறந்தோங்கும் தேனாறே!"

3 "மந்தணம்போல் தூவெள்ளை
மாமுகில்கள் கடல்குடித்துச்
சுந்தரியாள் துர்க்கைஎனத்
தொனிஎழுப்பி மின்வெட்டி
அந்தமிலா உமையென்ன
அருள்சுரந்து பொழிமழையால்
பைந்தமிழைச் சிவநெறியைப்
பயிர்ஏற்றும் தேனாறே!"

4 "வேள்விப்புகையும் அகிற்புகையும்
விரவிக்கலந்து முகிலாகிக்
கேள்விமுறைதான் இல்லாதே
கெடியாய்க் கடலைக்குடித்(து)எழுந்து
தேள்விப்புருதி தருவ(து)எனத்
திகைத்து மயங்கிக் காற்றடியால்
தாள்குப்புறவே அலைந்து துளி
தான்பெய்திலங்கும் தேனாறே!"

5 "கலைமகள்போல் முகில்எழுந்து
கடல்மேய்ந்து கருவுற்ற
தலைமகளாம் துர்க்கையெனத்
தளர்நடையிட்டு(உ)றுகாலால்
அலைமகள்போல் அலைமுகில்கள்
அசலமகள் போற்கருணை
தலைமையுடன் பொழிதரலால்
தமிழ்பரப்பும் தேனாறே!

6 "தேறுமதி ராங்கியத்துச்
செல்வன் அண்ணாமலையான்
ஆறுமுகம்தனைப் பெற்ற
ஆதிசிவன் எனப்பெற்ற
வீறுமதிச் செல்வர்குலம்
மென்மேலும் விளங்குதல்போல்
ஏறுமுகத் தோடுதமிழ்
இசைத்(து)ஓடும் தேனாறே!"

7 "ஆற்காட்டுக் கண்மாயின்
அணிகிழக்கில் புறகரையில்
வேற்காட்டும் கண்ணிஉடன்
விரும்பிஉறை வேய்முத்தன்
ஆற்காட்டு மதுநதியான்
ஆலயத்தின் புறத்து(உ)தித்துப்
பாற்காட்டித் தேன்காட்டும்
பல்குசுவைத் தேனாறே!"

8 "ஆறு,குளம்,கண்மாய்கள்
அலங்கமுறும் ஊருணிகள்
தேறுபணிவுடைய பள்ளம்
செய்கள் எலாம் நீர்நிறைத்துப்
பேறுபலவும் நல்கிப்
பெருநாதன்எனும் கடலில்
கூறுடனே கலந்தும்சீர்
குலைதல்இலாத் தேனாறே!"

9 "நிலமகளின் திலகமெ(ன்)னும்
நீர் உடுத்த பாரதத்தில்
புல மிகுத்த தென்னுட்டில்
பூழியர் கோன் பாண்டிதனில்
தலைமை பெறு மகுடமணித்
தன வணிகர் நாட்டிடையே
நிலைமை பெற வளம் பொலியும்
"நியமம்" எனும் நீர் நாடே!"

10 "வானுடர் தொழுதேத்தும்
வள்ளல் முழுக்காடுகின்ற
தேனுறு பாய்தலினுற்
செந்நெல் மிக விளைந்து
வானுடரும் நாணும்
வளர் நியமத்தார் சிறந்த
தே(தே)னுடு சோலை திகழ்
தென்னேம நன்னுடே!"

11 "கல்விச் சிறப்பால் பொருட் சிறப்பால்
கனத்தால் தனத்தால் காரியத்தால்
அல்லல் அறுக்கும் அறச் சொல்லால்
ஆசாரத்தால் நியமத்தால்
வல்ல திறத்தால் எளிமையினுல்
வலிந்தீந்துவக்கும் வண்மையினுல்
தொல்லைப் புகழால் இணை சொல்லத்
தோன்று நேமச் சுடர் நாடே!"

12 "ஆற்றிற் சிறிதே ஆனுலும்
ஆறுமுகத்தான் சிகிமலையின்
போற்றும் உறுப்பாய்ப் புலவர் சொலப்
பொலிந்திடு மது நதிப் புறவினிலே
ஏற்றமுடைய செயங்கொண்டான்
இன்நெறி ஆலயம் இலங்குவதால்
மாற்று நிலை தவிர் பொன்னெ(ன்)னவே
மல்கும் நேம வள நாடே!"

13 "ஈவாரில்லை ஏற்பார்கள்
இல்லாமையினால் மனத்தின் வழிப்
போவாரில்லை யாவருமே
புலனையடக்கும் பொற்புளரால்
சாவாரில்லை இடைநடுவில்
தளர்வாரில்லை சார்நோயால்
ஓவா நீரின் நிலவளத்தால்
ஒப்பில்நேம உயர்நாடே!"

## (நேம) நகரப்படலம்

14 "குன்றக்குடி யென்னும்
குமரன் திருத்தலத்தின்
நின்றெழுந்து நேர்வடக்கே
நெறிகூடித் திருமதுரை
ஒன்றும் உயர் சாலையினில்
ஒருநாழி வழிதனிலே
நின்றுதிகழ் திருத்தலமே
"நியமம்" எனும் நெறித்தலமாம்!"

15 "ஒப்புச்சொல ஓர்நாடி(ல்)லையேல்
உயர்(வு) எவ்வகையால் உரைபெறுமாம்?
அப்புத்திகழும் நேமமெனும்
அடல்சேர் நாட்டின் அணி நகராய்
செப்பும்புரங்கள் சிரித்தெரித்த
செயங்கொண்டானின் நேமச்சீர்
செப்புந்தரமோ? கனிச்சுவைதான்
தின்றாலன்றித் தெரிந்திடுமோ?

16 வரப்பே இல்லை எனும் சிறுமை
வரம்பின் இடையும் வரம்பின்றி
நிரப்பேயாக முத்து (உ)றங்கும்
நீரின்வளஞ்சேர் நேமமெனும்
புரப்போர்திகழும் ஊர்ப்புகழைப்
போந்தால்அறியலாம் அன்றிச்
சுரப்பேயறியா மலடிமக்கள்
சொல்லின்சுவையை உணர்வாளோ?

17 "ஏழ்தீவந்தனில் உயரும்
எழில் நாவலந்தீவில்
சூழ்பொழிலாற் சிறந்திலங்கும்
தோகைமலை தனக்(கு) அணித்தாய்
வாழ்வுறு சோழீசனுடன்
வயிரவனும் ஆட்சிசெயும்
ஏழ்நகரத் தார் திகழும்
எழில்மிக்க நேமமதே!"

18 "எத்தப்பு மில்லாதான்; ஏழுநகர் வணிகர்எலாம்
நித்தம் புகழுறவும் நிலையாத திருமகளும்
சித்தம் குளிர்ந்தென்றும்
திகழச்செய் செழும் புலவன்
முத்தப்பன் பணிந்தேத்தும்
முதுநகரும் நேமமதே!"

19 "நந்தியெனும் மன்னவனும்
நன்நேமம் எனும் கோனும்
கொந்தணியும் நீபத் தார்க்
குலசேகரக் கோனும்
நிந்தையிலாப் புலமையரும்
நினைந்துருகி நெஞ்சாரப்
பந்தம் அறப் பணிந்தேத்தும்
பழந்தலமும் நேமமதே"

20 "தென்னவனுய்க் கேரளத்தும்
சீர் ஆட்சி செய் சிங்க
மன்னவன் பேர் சேர்ந்(து) ஒளிரும்
வளநாட்டில் கீழ்க் குண்டா(று)
என்றும் நதிக்கு (உ)த்தரத்தில்
இசைமிக்க தளத்தலைவன்
கன்னன் உதயம் செய்த
காங்கேயன் நேமமதே!"

21 "உகந்தான் கண்மாய் உள்வாய்
உவந்தளிக்கும் சாத்தனுக்குச்
சகந்தாழும் கழுத்தளவு
தண்ணீரைக் கட்டுவ மேல்
உகந்திடவே மழை பொழியும்
உண்மை; இன்றும் கண்கூடாம்
உகந்தானும் ஆயர்கோன்
உகந்திருந்த நேமமதே!"

22 "மனத்தின் உரத்தால் நியமத்தால்
மாருமறையோர் மலர்வேதன்
இனத்தில் வந்தார் தனவணிகர்
என்றும் ஏத்த இசைமல்கும்
புனத்தின் இடையே பொழில் திகழும்
பொன்னூர் நேமப் பூஞ்சிறப்பை
இனைத்தென் றுரைக்க வல்லாரே
இல்லை உலகில்; ஈதுண்மை!"

23 "நொண்டிக் கருப்பன் சப்பாணி
நோற் பார்க்கு அருள் அந்தர நாச்சி
கண்டார் பழிச்சும் பள்ளிமடைக்
கணநாதன் சேவகப் பெருமாள்
செண்டார் காடப்பிள்ளை எனும்
செய்ய சாத்தன் நெய்மேனி
வண்டார் குழல் அழகிய நாச்சி
வாழும் பதியும் நேமமதே!"

24 "பொன்னன் அமரன் எனும்
புகழாளருடன் பிறந்து
தென்நேம நாட்டில் அரண்
திகழ் கோட்டைதனைக் கட்டி
மன்னவனும் சவுந்தர நன்
மாறனால் வீ(ழ்)ந்த புகழ்த்
தொன்மையினன் நேமன் வாழ்
தூய தலம் நேமமதே!"

25 "பஞ்சநதப் பேர் வாய்ந்த
பாவலனும் பழனியில் வாழ்
எஞ்சிவனும் ஈசான இறையவனும் பூசனையால்
விஞ்சுபுகழ் மெய்யப்பன் வித்தக ராம(ந்)நாதன்
நெஞ்சுருகத் தொழுதேத்தும்
நீள் தலமும் நேமமதே!"

26 "நகரத்தார் நவ தளியுள்
நல் இளைசை, வயிரவனூர்
சிகரமுயர் திருமாற்றூர் சீர் இலுப்பை சூரைநகர்
பகர் இரணியூர், வேலை பதிப்பிள்ளையார் பட்டி
நிகரில்எட்டாம் ஊர்திகழ
நின்றதலம் நேமமதே!"

27 "திருப்புத்தூர் கானப்பேர்
திகழ்பறம்புப் பிரான்மலையும்
மருப்புகுதும் பாண்டிதலம்
வளைந்திடவே அட்டசித்தித்
திருப்புகு நற்பட்டமங்கை
திருக்கோட்டியூர் இடையே
கருப்புகுதா நெறிகாட்டும்
கடித்தலமும் நேமமதே!"

28 "மங்களநாயகி உடனாய்
மதுநதியான் மகிழ்ந்துறையும்
துங்கநிறை சினகரமும் தும்பிமுகன் வெயிலுகந்த
ஐங்கரனின் திருத்தளியும் அளகைக் கணநாதன்
பொங்கமிகு ஆலயங்கள்
பொலிதலமும் நேமமதே!"

29 "கூடல்நகர்ச் சுந்தரனின்
குலவுவிளையாடல் என
நாடல்பெறு கலைஞான
ராங்கியம் அண்ணுமலையின்
கோடலில் வாழ்வு(ஆ)ண் டென்னக்
குலவும்அறுபான் நான்கு
பாடல்பெறு நேமநகர்ப்பதிச்
சிறப்புப் பகர்(வு)அரிதே!"

## பல்கணத்துப் படலம்

30 "ஆதிசவுந்தரி சிலையில்
அமைந்ததொரு குறைநினைந்து
வேதியர்கள் வேறுசிலை
விருப்புடனே நிறுவுங்கால்
நீதியொடு நெறிகூறி
நிலைபெற்றுச் சன்னிதிகொள்
சோதிசவுந்தரி திகழும்
துகளில் நிலைஓர் பாலாம்!"

31 "மதகளிற்றின் திருமுகமும்
மாணிக்கமாம் பேரும்
நதம்ஒழுக்கும் துதிக்கரமும்
நால்வாயும் செயங்கொண்டான்
புதல்வனென அப்பெயரும்
புனைந்து கன்னித்திசை அமர்ந்து
நிதம்அருளும் கணபதிவாழ்
நிலையொருபால் நிலவிடுமே!"

32 "உருபாந்தள் வாய் கவ்வி
உலகெல்லாம் ஒரு நொடியில்
வருபாகத் தோகை மயில்
வாகனனும் மால் மருகன்
கிருபாகரன் நேமக் கெடித்
தளியில் கிருபாந்தப்
பெருபாகன் எனத் திகழும்
பேர்த்தளியோர் பாலுளதே!"

33 ‘‘விண் வாழும் புலவரினும்
மேலானூர் வேதநெறிப்
பண்பாடும் தெய்வ நெறிப்
பாவலராம் நால்வர்களைக்
கண்ணுரு(ம்) இளமுருகைக்
காசி விசுவேசுரனை
திண்ணூர் மேலேசனையும்
சேர்ந்தமைந்த தளி பலவாம்!’’

34 ‘‘மலிபுகழ்ப்புத்தூர் வயிர
வன் கூறு எட்டில் ஒன்று
பொலிபுகழார் வடுகேசன்
புனிதை சவுந்தரி பின்னாய்
ஒலியெழுப்பி மேற்கு முகத்(து)!’’
உயர்யோக நிலை வாய்த்துக்
கலியெழுப்பி மகிழ் நிலையோர்
கலைபோலத் திகழ்ந்திடுமே!’’

35 ‘‘அன்னதிறல் வடுகனெதிர்
ஆன்ற பலி நேர்ந்த கடா
தன்னதிரச் சத்தமிட்டுச்
சன்னல் நுழைந்(து)இமைப் போதில்
முன்னிலுமே சிறப்புமைய
முன்னிற்கும் மூதருளைப்
பொன்னளியார் கூறலன்றிப்
புலமைக் கூற்றுமன்றே?’’

அகத்தீசுவரப் படலம்

36 ‘‘கைமிகுந்தார்; யாண்டும் அரன்
கதைகேட்கும் விருப்பமுளார்
நைமிசத்து முனிவர்கட்கு
நற்சூதன் புகன்றபடி;
பைமிகுந்த நச்சரவப்
பணியணிந்தான் பதிகளுள்ளே
சைமிகுந்த நியமநகர்த்
தலந்தானே தலைமைபெறும்!’’

3 “எவ்வாறெனில் கேளீர்
ஏந்தல் அகத்தியன் ஓர் நாள்
செவ்வாரும் வான்வழியாய்ச்
செல்போதில் வழி மறைத்து
எவ்வாறும் மேல்செல்ல
இசையாதே மனங்கவர்ந்து
துவ்வாத சுக நிலையில்
சொக்க வைத்த(து)ஓர் சோலை

38 “ஏது இந்தச் சோலை?” என
எண்ணியே நிலத்தில் எய்தி
மாதியாலும் பாதியனின்
வடிவமைத்தான்; மணம் நிறைந்த
கோதில் தேன் கல்லையினிற்
கொண்டு முழுக்காட்டி நின்று
மாதினியான் திருமுடிமேல்
மலர் சாத்த முயலுங்கால்”

39 “வைத்தமலர் நில்லாத
வகைசெய்து தேன் பல்கிச்
சத்தம் உறச் சிவக்குறியைத்
தழுவி மகிழ் உமைபோலப்
பத்தியொடு அணைந்து வலம்
பாலித்த தேன்பெருகி
உத்திரமா திசைச்செல்லும்
ஓவியத்தைக் கண்டானல்!

40 “பெற்ற மக்கள் ஈட்டு பொருள்
பெரிதென்ன நினைப்பதியல்(பு)
உற்றதுவும் பெரிதானல்
உளமகிழார் உலகிலிலர்!
நற்றவரே! தேனற்றில்
நாதன் அகத்தியன் மூழ்கிப்
பெற்றமுகைத் தோன்தனையும்
பேணி வழிபட்டனனல்!”

41 "அங்கிருந்து தென் திசையை
அணுகுங்கால் மாணிக்கப்
பொங்கொளியைக் கண்டுள்ளம்
பூரித்தான்; புகழ்ந்தேத்தி
"எங்கு உ)ளை நீ இறைவா? சொல்
என்றக்கால், செயங்கொண்ட
சங்கரன் என் தாதை இங்கே
தரியலர் தம்புர மெரித்தான்!"

42 "நான் இங்கே அச்சிறுத்தேன்;
நாம் இன்றிச் செயல் ஏது (எ)ன்று
ஆனதே நினை அமரர்
அறிவுற்றார்; எந்தையும் ஏன்
மேனுளைக் கோரிக்கை
மெய்யாக்கி எனைத்துதித்தான்
தேனுற்றான் வாய் மலர்ந்து
சிரித்தளவில் புரம் பொடியே!"

43 "மாணிக்கக் கணபதி நாம்;
மயில் மலையில் தம்பி கந்தன்
ஆணிக்கையாய் உள்ளான்
அங்கெய்தி அஞ்சலித்துத்
தூணிக்கை அவல் வைத்துத்
தோகை யடிக்குஞ் சரத்தின்
பாணிக்கை தனைப்பரவிப்
பாடி வழிபட்டனரால்!"

44 "ஆதலினால் நைமிசத் தீர்!
அரன் தலத்தில் நியமமிது
ஓதலுக்கும் அடங்காத
உயர் புகழுக்கு (உ)ரியதுவாம்
காதலினால் நீர் தொழுது
கதி பெறுவீர்" என்றுரைக்க
மாதவர்கள் நேமம் எய்தி
வழிபட்டு வாழ்த்தினரால்!"

## சோழீசர், (தீர்த்த விசேடப்) படலம்.

45 "பாண்டியனை வெல்ல எனப்
படை கொண்டு, கூடல்தனைத்
தூண்டுகையால் முற்றுகை செய்
சோழனவன் சிவபரனே
ஈண்டாதே துரத்தலினால்
இயல் மாறி அசுவத்தத்
கூண்டான கானிடையோர்
கொடு மடுவில் வீழ்ந்தானே!"

46 "மடு நீரின் பரிசத்தால்
மணிமேனி வெப்ப முறத்
தடுமாறும் வேளையினில்
"தமிழ்ச் சொக்கா! தஞ்சம்"என்று–
வடுமாறும் நெஞ்சத்தான்
வழுத்திடவே வான் ஒலியாய்க்
கடுமாறும் தேனாறு
கண்டு நீராடுக" (எ)ன்றுர்

47 "எங்குளதோ? தேனாறு?
யான் அதன்பாற் செல்லளவும்
தங்குமோ என்னுயிரும்;
தாங்காது எம்பெருமானே!
மங்குல்போற் கண்டத்தாய்
வாழ்விப்பாய் என்றேத்த
"இங்கும் உளதாறு; அதனை
எய்தி நீராடு"கெனும்

48 எட்டெட்டாம் ஆடல் செயும்
எஞ்சிவனுர் விழிநோக்கால்
துட்டமன வீறடங்கித்
தொடு மடுவில் வீழ்ந்துகதி
முட்டஉறும் உளவர் பிரான்
முந்தை நிலை தானுணர்ந்து
சிட்டர் தொழமேல் எழுந்தோர்
திருக்குளத்தைச் செய்தனனே!"

49 "குளஞ் செய்து பெயர் பரவிக்
குடைந்து குடைந்(து) ஆடுங்கால்
வளஞ் செய்தான் மேனி வெப்பம்
மாறிய(து) அம்மட்டோ? முன்
பழஞ் செடிகள் பவம் அனைத்தும்
பனிபோலப் பிணிப் பகன்று
கழஞ்சுறுநற் பொன் ஒளியாம்
கதிர்மேனி ஆயதம்மா!"

50 "மிருத்திகையால் சிவனுறுவம்
விழைந்(து) இயற்ற எண்ணுகையில்
கிருத்திகையாள் வளர்த்த செல்வன்
கிருபாந்தகன் முருகன்
அருத்தியொடு தோன்றி "எந்தை
அடையலர் தம்புரம் எரித்த
கருத்தினிய தலம் இதுவே;
கான் இடையே தணியுளதால்!"

51 "அதை வணங்கி மயில் மலையும்
அஞ்சலிப்பாய்!" எனச் சொல்லச்
சுதை வணங்கு செம்மேனிச்
சோழர்பிரான் இடர் தொலைத்துப்
புதைகின்ற வாயுடனும்
பொழிகண்ணின் நீருடனும்
ததைகின்ற செயங்கொண்டான்
தனைக்கண்டு தமிழ் கண்டான்!"

52 "சந்த நிறை கங்கையினைச்
சடையில் வைத்த செயங்கொண்ட
அந்தரனை வழிபட்டே
ஆராத காதல் உடன்
சுந்தரமாம் மயில் மலையில்
சுடர் வேலனைத் தொழுது
அந்தம் இலாக் காவிரி நா(டு)
அடைந்திட்டான் அணிவலவன்!"

53 "சோழகுளச் சிறப்பதனைச்
சொல்வார் யார்? தாமரையும்
ஆழமதைக் குறைக்கஒண்ணு
அருமைதாம்; மூழ்குபவர்
தோழமெலாம் நீக்கிஉடல்
சுடர்எரிக்கும் சொக்கறுமே
சோழனவன் பணிந்ததனுல் சோழீ
சன் என்றமைந்தான்!"

54 முனிவரர்காள்! எவனொருவன் தூநீராடி
முக்கரணசுத்தியொடு முக மலர்ந்து
கனிமொழியால் செயங்கொண்டான் புகழைப்பாடிக்
கருத்துவந்திப் புராணத்தைக் கற்றுணர்ந்தான்
நனிசிறந்த இலோக வாழ்வு காண்பான்
நாளும் வளர்ந்தேறும் நலமாம் வாழ்வில்
தனி சிறந்து உலகோ பகாரியாகத்
தழைத்த முத்தியும் பெறுவான் சரதம் ஈதே!"

## போற்றிப் படலம்

55 தேனுறுடைய சிவன் போற்றி!
திருமாமுடிமேல் கங்கை எனும்
வானுறுடைய தவன் போற்றி!
மலையன் மருமான் என வந்து
தேனு(று) இதழி வேப்பந்தார்
சேர்த்துத் தென்னு(டு) ஆண்ட பிரான்
கோனுன் வெட்டக் குளிர்ந்த செயங்
கொண்டாய்! நின் சீர்க் குணம் போற்றி!

56 முத்தப்பன் பாமலர் சூடும்
முதல்வா போற்றி! முத்தமிழின்
சித்தனை அகத்தியனும்
தேவாரத்தால் மூவர்களும்
நித்தம் போற்றும் அடிபோற்றி!
நிகரில் கருணை அருணகிரி
சித்தம் உருக்கும் வாசகனும் சேவித்தேத்தும்
சிவன் போற்றி!

57 முத்தி நகர் ஏழுடைய முதலே போற்றி!
முத்தமிழும் ஏழிசையும் முதிரப் பாடும்
பத்தியினுர் தமக்கு (எ)ளிய பரனே போற்றி!
பார் ஏழும் கடல் ஏழும் கடந்து நின்ற
சித்தனே த்தும்வல்லசயங்கொண்டாய் போற்றி!
தேவி சவுந்தரிக்கினிய தேசா போற்றி!
ஒத்(து) என்னை உய்க்கும் உளம் ஈவாய் போற்றி!
ஒன்றும் இலா(து) எல்லாமாய் உள்ளாய் போற்றி!

58 சத்தியவான் நாரணனுர் ஏத்த நின்ற
தாணுவே! நேம நகர்ச்சம்பு போற்றி!
அத்தியொடு கடம்பு (அ)ருளும் அரசே போற்றி!
ஐம்படையான் பிறப்(பு)அழிக்கும் அடலாய்போற்றி!
பத்தியத்தும் கத்தியத்தும் மட்டோ? மோனப்
பண்பாலும் உரைத்துணரப்படாதாய் போற்றி!
நித்தியனே! செயங்கொண்ட நிலையாய் போற்றி!
நினைவாகி நினைப்பரவும் நினைவே போற்றி!

59 ஆண்டியாய் விறகு தலையாளுகி மண் சுமந்து
பாண்டியானுகி வந்தும் பரிநரியாகச் செய்தும்
ஈண்டிய புகழாய் போற்றி!
இளசை மாவணிகர் ஏத்தும்
சேண் திகழ் மதியணிந்த
செயங்கொண்டாய்! செம்மல் போற்றி!

60 போற்றி! ஐந்தொழில்
புரிவானே! செயங்கொண்டாய்!
போற்றி! வானவர்க்(கு) அரியாய்!
புலவர் தமக்(கு) எளியானே
போற்றி! சவுந்திரி பாகா!
போற்றி! அகத்தியன் பணியைப்
போற்றி! அருள்செய்து
அடியர் புந்தி உறைவாய் போற்றி!

61 பொங்கல் தொறும் தமிழ் மாலை புலவர் சூட்டும்
பொற்கழலாய் போற்றி! எமைப்புரக்க நின்ற
சங்கரனே! பொழில் நேமத்தளியில் நின்ற
சதுர் வேதத்தலைப்பொருளாம் தமிழே! போற்றி!
கங்குல் பகல் சந்தியினில் கருத்தில் காணும்
கலைவல்லார் தமக்(கு)இனிய கண்ணே போற்றி!
பொங்(கு)அரவப்பூணனே! செயங்கொண்டானே!
போற்றி! முதல் முடிவில்லாப் போதா போற்றி!

62 ஏழிசைப் பயனே போற்றி! ஏந்தலே போற்றி! சந்தத்
தாழிசை பனுவல் வேட்டும் சங்கவார் காதாய் போற்றி!
ஆழிசைப் பாயலாக் கொள் ஆதிமால் பங்கா போற்றி!
சோழிசுவரனே! கூடல் சுந்தரா போற்றி! போற்றி!

63 கத்து கடல் சூழ் உலகில் வாணிகம் செய்
கலையினராய் நினைமறவாக் கருத்தராகி
வித்(து) எனவே வாழ் நேமவணிகர் கோயில்
விரும்பியுறை கற்பகமே! வினைகடந்த
சத்துச் சித்தானந்த வடிவே போற்றி! சார்வரி
தை, அத்தத்தில் சாந்தி கண்டாய்!
புத்தி அருள் செயங்கொண்ட தேவா போற்றி!
பொன்நேம நாட்டரசே போற்றி! போற்றி!

64 சங்கரா போற்றி! தக்கன்,
சலந்தரன், அயன், ஏமன், மா
துங்கமதன், அந்தகன், புரங்கள் செற்ற
சோழீசா! போற்றி! தெங்கஞ்சோலை சூழும்
பொங்கமிகு தேனூற்றுப் போக்கு நேம
புரம்ஆளும் புரந்தரனே போற்றி! மாலோன்
பங்கினனே! செயங்கொண்டபரனே! எந்தாய்!
பல்லாண்டு பல்லாண்டுன் பதியே போற்றி!

---

வாழியவே தென்பாண்டி வளநாடு! மாநியமம்!
வாழியவே செயங்கொண்டான் மலரடிகள்-வாழியவே!!

[ முற்றும் ]

மங்கலப்பாண்டி வள நாட்டின் கண், மயூரகிரிக்கு வடக்கில் நகரத்தார்களின் குலநலத் தெய்வக் கோயில்கள் ஒன்பதில் ஒன்ருய் தேனுறு உற்பத்தி தலமாய், நால்வர்கள் பாடல் பெற்ற தலங்களுடன் சமமாக வைத்து வழிபாடு செய்யத் தக்க தொன்மையும் பெருமையும் உடையதாய்த் திகழுவது நேமம் திருக்கோயில். இக்கோவிலில் பிறந்த பெருமகனுரே நமது பாடுவார் முத்தப்பையா. அவர் தம் ஆன்மீக வாரிசாய், சிவப் பட்டியில் பிறந்து, மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் பயின்று அளவிறந்த நூல்களேயும், பாடல்களேயும் இயற்றி அரும் பணியாற்றி வரும் இளவரசன், நா. நடராசன் என்னும் செல்வப் புலவர் பேரார்வத்துடன் சித்தம் உவந்து "நேமம் கோவிலின் தெய்வீக வரலாற்றை" எழுதி வெளியிட்டிருப்பது மிக மிக பாராட்டத் தக்கது.

**சேவு. மெ. மெய்யப்ப செட்டியார் காரைக்குடி,**

உள்ளம் சிறந்து, உலகை வலம்வந்து இறைவன் புகழையும் ஏமூர்ப் புகழையும் இசைத்தமிழாற்பாடி ஒப்பற்ற பணியாற்றிவரும் உத்தமன் நடராசன் எழுதியுள்ள ஒன்பது நகரக்கோவில்கள் வரலாறுகளேயும் பார்த்தோம். ஆயினும் இறுதியாகவும் பின்முதலாகவும் பெருநயம் பொருந்த அறுபத்து நான்கு ஆடலேப் போல 64 பாடலில் அமைந்து, அறுபது நாழிகைக்குள் உருவான நேமம் புராணத்தைப்போல மற்றவை நமக்குப் பேரின்பம் நல்கவில்லே. "உருத்திர பல்கணத்தார் என்ற சம்பந்தப் பெருமான் திருவாக்கை நினேவூட்டும் பல் கணத்துப் படலமும், ஹாலாஸ்ய மகாத்மியச் சான்று கூறும் சோழீசர் படலமும், கல்வெட்டு கர்னபரம்பரைச் செய்திகள் கூறும் பகுதியும் பெற்றுப் பொலியும் இப்புராண மகாத்மியம் அருள்பெற்ற புலமையரல்லாதாரால் அளவிடற்கரியதாகும். இதனே செய்வித்த வயிரவன் செட்டியாருக்கும் நா. அ. குடும்பத்தாருக்கும் சிவமணி நடராசனுக்கும் எல்லா நன்மைகளும் ஏற்படுவது நிச்சயம்.

**—துர்க்காம்பாள்தாசன். அ. இராமநாத சிவாசாரியர்.**

## நாராயண — நடராசன் இயற்றிய நூல்கள்

[ஒவ்வொரு தலத்துக்கும் பதிகமாக இவர் பாடியுள்ள பாடல்கள் பல்லாயிரம்: அச்சாகி, ஆயத்தமாகியுள்ள நூல்கள் மட்டுமே இங்குள்ளவை]

*1. வணிக மண்டல சதகம். 2. வணிகர் தசாங்கம். 3. வணிகர் வரலாறு. 4. இலக்குமி அந்தாதி. 5. சரசுவதி அந்தாதி, 6. பார்வதி அந்தாதி. 7. புவனேசுவரி பஞ்சரத்தினம் 8. பூலோக நாதர் பஞ்சரத்தினம். 9. உப்பூர் விநாயகர் பஞ்சரத்தினம். 10. பழனியாண்டவன் வருகைப் பதிகம். 11. குன்றக்குடி முருகன் வருகைப் பத்து, 12. சோலைமலை முருகன் வருகைப் பத்து. 13, எம்பாவை இருநூறு. 14, பலதேவர் பாவைப்பா. 15. புலவர் புகழ்ப் பாவை. 16. மீனுட்சி பதிகம். 17, மீனுட்சி சுந்தரர் பதிகம், 18. கருப்பையா பதிகம். 19. நாராயணையா சரிதப்பா. 20, முத்தப்பையா சரிதப்பா, 21. சுந்தரராசன் திருவூசல், 22. சோமசுந்தரம் காதல். 23. தமிழ்த் தொண்டர் தொகை. 24. இளந்திருமுக விலாசம். 25. செயங்கொண்ட அட்டாட்சரத் தோத்திரம். 26 போரூர் முருகன் சோடகம். 27. மாற்றூர் வருக்கக் கோவை. 28. உருத்திராபதீசர் உயிர் வருக்கப்பா. 29. பட்டினத்தார் சரிதப்பா. 30. சிந்தனைச் செய்யுட் கோவை. 31. யாத்திரைத் தோத்திரங்கள். 32. நகரக் கோவில் புராணங்கள்.*

## பதிப்பித்த நூல்கள்

*முத்தப்பர் வரலாறு—நகர வரன் முறை—ஆயிரம் கோயில்கள்—அறிஞர் ஆயிரவர்—நகரத்தார் சரித்திரம் திருமுக விலாசம்—செயங்கொண்டார் சதகம்—முருகன் தோத்திரம்.*



---

— சிவகாமி அச்சகம், புதுக்கோட்டை. —

